Registered No. M. 1159

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# ✳ சைவம் ✳

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்
மாதாந்தரப் பத்திரிகை.

மலர் **1**.] ஆனந்தஞு மாசிமீ - 1915 பிப்பிரவரிமீ [இதழ் **2**.

உள்ளுறை. பக்கம்.



இது
திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ - சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுக்குச்
சமர்ப்பிக்கப்படுவது.


பத்திரிகாசிரியர் :
இருக்கம் - ஆதிமூல முதலியார்,
*(Retired Accountant, Military Accts. Department.)*
நெ. 43, பாளையப்பன் வீதி, சென்னை.



சென்னை :
வைஜயந்தி அச்சுக்கூடம், மவுண்ட்ரோட்.
1915
வருடச்சந்தா அணு **12**.
(தபாற் கூலியுடன்.)

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் போஷகர்கள்.

---

ஸ்ரீமான் - மயிலை - கதிர்வேல் முதலியாரவர்கள்,
*General Merchant, Madras.*

,, P. ராவ்சாஹிப் - மாசிலாமணி முதலியாரவர்கள்,
*Engineering Contractor, Madras.*

,, S. இரத்தினவேல் செட்டியாரவர்கள்,
*Dubash, Messrs. Best & Co., Madras.*

,, C. வெங்கு பிள்ளையவர்கள்,
*Retired Deputy Collector, Madras.*

,, V. முத்தையா பிள்ளையவர்கள், வர்த்தகர், சென்னை.

,, P. சுப்பிரமணிய முதலியாரவர்கள், B. A., B. L.
*High Court Vakil, Madras.*

---

**சபைத்தலைவர்.**

ஸ்ரீமான் - ச. இராஜகண்ணு முதலியாரவர்கள், B. A.,
*Supdt., Acct. General Office, Madras.*

**காரியதரிசி.**

,, இருக்கம் - ஆதிமூல முதலியாரவர்கள்,
*Retired Accountant, Mily. Accts. Dept., Madras.*

**பொக்கிஷதாரர்.**

,, V. மீனாட்சிசுந்தர முதலியாரவர்கள்,
*Surveyor and Draftsman, Corporation of Madras.*

**அத்தியட்சர்கள்.**

,, S. விநாயக முதலியாரவர்கள், B. A.,
*Supt. Accountant Genl's. Office, Madras.*

,, P. C. சமரபுரி முதலியாரவர்கள்,
*Clerk, M. & S. M. Ry. Engineer's Office, Madras.*

,, W. T. கோவிந்தராஜ முதலியாரவர்கள்,
*Clerk, Office of the Registrar of Co-operative Credit Societies.*

,, ம. இரத்தினசபாபதி முதலியாரவர்கள்,
*Clerk, Binny & Co., Madras.*

,, தண்டலம் - அப்பாகண்ணு முதலியாரவர்கள்,
*Clerk, Paper Currency Office, Madras*

**கணிதபரிசோதகர்.**

,, M. அப்பாதுரை முதலியார் அவர்கள்,
*G. P. O. Madras.*



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவம்


| மலர் **1.**] | ஆனந்தஸு மாசிமீ 1915ஸு பிப்பிரவரிமீ | [இதழ் **2.** |
|---|---|---|


## சைவம்.

---

" சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவார முந்திரு வாசகமு
முய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே. "

உலகத்தில் எண்ணிறந்த மதங்களிருக்கின்றன. இவற்றுள் மிகவும் பிரசித்திபெற்றிருப்பன கிறிஸ்து மதம், மகம்மதியமதம், புத்தமதம், இந்துமதம் என்னும் இவைகளே. இவற்றுள், கிறிஸ்து மதம் உலகத்தில் எல்லாக் கண்டங்களிலும் பல அரசர்களாலும் மிஷன் என்னும் சபைகளாலும் பரிபாலிக்கப்பட்டு உலகெங்கும் பரவி யிருக்கிறது. மகம்மதியமதம், துருக்கி, ஆப்கானிஸ்தானம், பெலூ கிஸ்தானம், பாரசீகம், அராபியா, எகிப்து முதலான தேசங்களில் அத்தேசங்களின் அரசர்களால் பரிபாலிக்கப்பட்டு அத்தேசங்களி லும் நமது இந்தியாதேசத்திலும் பரவியிருக்கிறது. புத்தமதமும் சைனு, டிபெட், மங்கோலியா, மஞ்சூரியா, கொரியா, ஜப்பான் முத லான தேசத்தரசர்களாற் பரிபாலிக்கப்பட்டு அத்தேசங்களிலும், நமது இந்தியாதேசத்திலும் பரவியிருக்கிறது. இந்துமதமோ வெனில் பரிபாலிப்பவ ரொருவருமின்றி முற்கூறிய மூன்று மதங் களினிடையில் இத்தேசத்தில் நசுங்குண்டு கிடக்கின்றது. இந்த இந்து மதமும் ஒருமதமல்ல. வேதத்தை யங்கீகரித்த நூற்றுக் கணக்கான மதங்கள் பொதுவாக இந்து மதமென்று சொல்லப்படும். இத்தேசத்திற்குப் பரதகண்டம், ஆரியாவர்த்தம் என்பன பூர்வீகப் பெயர்கள். சாதிப்பிரஷ்ட மடைபவர்களுக்கு முன்னுள்ள பெயர்

மாறி வேறுபெயர் வழங்குவதுபோல் வேற்றரசர்களின் அரசாட்சியால் இத்தேசத்திற்கு முன்னிருந்த பெயர்கள் நீங்கி இந்தியா என்னும் பெயர் வழங்கலாயிற்று. இதனால் இத்தேசத்தினர் இந்துக்களென்னப்பட்டனர். இவர்கள் மதத்திற்கும் இந்து மதம் என்று பெயர் வழங்குகின்றது. இந்த இந்து மதத்தின் ஒருபகுதியாயிருப்பது நமது சைவசமயமாகும். இச்சைவசமயம் இவ்வளவு சுருங்கிய வியாபகத்தை யுடையதாயிருப்பதுடன் எந்த அரசராலேனும் ஜனத் தலைவராலேனும் பரிபாலிக்கப்படாமல் மாலுமியில்லா மரக்கலம் போல் நிலைகுலைந்திருக்கிறது. இதனால் சைவசமயத்திற் பிறந்தோர் தங்கள் சமய உண்மைகளை யறியாமல் சமயக்குருடராய்ச் சைவ ஒழுக்கங்களைக் கைவிட்டிருப்பதோடு தூஷித்தலுஞ் செய்கிறார்கள். முற்காலத்தில் சமணர்கள் சைவரைக்கண்டால் கண்டுமுட்டு (தீட்டு) வந்ததென்றும், அதைக்கேட்டால் கேட்டுமுட்டு வந்ததென்றுஞ் சொன்னார்களாம். இக்காலத்தில் சைவசமயத்திற் பிறந்தவர்களுக்கே சைவரைக்கண்டால் கண்டுமுட்டும் சைவம் என்னுஞ் சொல்லைக்கேட்டால் கேட்டுமுட்டும் உண்டாகின்றன. இதற்குக் காரணம் இவர்களுக்குச் சைவ உண்மைகள் தெரியாமையேயன்றி வேறில்லை.

சைவசமயமானது உலகில் மிகவும் சுருங்கிய வியாபக முடையதாயிருத்தல் அதின் சிறப்பினாலேயேயன்றி பிறிதொரு காரணத்தாலன்று. உலகமுழுதும் நிலமயமாயிருப்பினும் அதில் ஒரு பாகம் ஒன்றும் விளையாத பாலைநிலமா யிருக்கும். மற்றொரு பாகம் காடடர்ந்த முல்லை நிலமாயிருக்கும். வேறொரு பாகம் சமுத்திரத்தையடுத்த நெய்தல் நிலமாயிருக்கும். பிறிதொருபாகம் மலைகள் நெருங்கிய குறிஞ்சிநிலமாயிருக்கும். இன்னொருபாகம் நாடு நகரங்களடங்கிய மருதநிலமாயிருக்கும். மருதநிலத்திலும் நன்செய் புன்செய் நிலங்களும், கரம்புநிலங்களும், மேட்டு நிலங்களும், மயான பூமி முதலியனவும் இருக்கும். இவற்றுள், நன்செய்நிலத்தில் மாத்திரம் சிறந்த செந்நெற்பயிர் விளையுமேயன்றி, மருதநிலத்தின் வேறிடங்களிலாவது, பாலைமுதலிய நிலங்களிலாவது விளையாது. அவ்வாறு விளையாமையால் நெற்பயிரை இகழ்வாரில்லை. அதுபோல் சைவசமயம் இப்பரதகண்டத்தில் மாத்திரம் வியாபித்திருப்பதுபற்றி அதன் உண்மைகளை யுணர்ந்தமேலோர் அதனை இகழார். உலகத்திலுள்ள ஆசியாமுதலிய ஐந்துகண்டங்களும் மருதமுதலியஐவகை நிலங்களுக் கொப்பாகும். எல்லா மதங்களுக்கும் பிறப்பிடமாகிய ஆசியாகண்டம் பலபயிர்கள் விளையும் மருதநிலத்தை யொக்கும். ஆசியாவிலுள்ள பரதகண்டம் மருதநிலத்திலுள்ள நன்செய்நிலத்தை நிகர்க்கும். சைவசமயம் பரதகண்டமாகிய நன்செய் நிலத்தில் விளையும் செந்நெற்பயிரை மானும். சைவமாகிய செஞ்சாலிப்பயிர் சீவகாருணியம், கொல்லாமை, புலாலுண்ணாமை, கற்பு முதலிய உத்தமோத்தம குண நதிகள்பாயும் பரதகண்டமாகிய நன்செய் நிலத்திலன்றி வேறு புலத்தில் விளையாது. ஆதலாற்றான் இப்பரதகண்டம் புண்ணியபூமி யென்னப்பெற்றது.



இதுவரையிற்கூறியவாற்றால் சைவம் உலகமெங்கணும் வியாபித்திராததுபற்றி அதனை இகழ்ந்து கைவிடலாகாதென்பது விளக்கமுறும். சைவசமயமானது மற்றெல்லாச்சமயங்களையுந் தனக்குச் சோபானமாகக்கொண்டு அவற்றிற்கெல்லாம் நாயகமும் தாயகமுமாய் இராஜாங்கத்திலமர்ந்த சமயமாகும். இது பலகோடிஜன்மங்களிற் பெற்ற புண்ணிய பரிபாகமுடையார்க்கே அநுட்டிக்கநேரிடும். மனமொழி மெய்களாற் சிவநெறியொழுகி, சித்தாந்தசாத்திரங்களை யோதியுணர்வார்க்கே இவ்வுண்மை விளங்கும்.

**தாயுமானசுவாமிகள் பாடல்.**

இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டி யன்பா லின்பமாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிட்சை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ.

அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்று
மிந்த்ராதி போகநலம் பெற்றபேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

**சிவஞானசித்தியார்.**

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்

சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றுற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியிற் சேர்வர்.

முற்காலத்தில் நம்முன்னோர்களாகிய சைவ உழவர்கள் பாடசாலைகள் கோயில்கள் முதலிய பாத்திகளைக்கோலி, வேதாகமபுராணங்களாகிய களஞ்சியங்களிலிருந்து சமயபோதனை யென்னும் விதையை வாரியிறைத்து, பரதகண்டமாகிய நன்செய் நிலமெங்கும் இமசேதுபரியந்தம் சைவப் பயிரை விளைவித்து உலகத்தாருக்குச் சிவபோகத்தை யுண்பித்தார்கள். பிற்காலச் சைவ உழவர்கள் அவ்வாறு செய்யாமல் வாளாவிருந்து விட்டதனால், பரதகண்டமாகிய நன்செய்நிலம் புன்செய்நிலமாகமாறி, புறச்சமயக் காடுமூடி, கொலை புலை மதுபானம் வியபிசாரம் முதலியதுர்க்குணங்களாகிய தீயவிலங்குகள் வசிக்கும் இடமாய்விட்டது. இனி இக்காட்டைவெட்டிச்சுட்டு, பண்டுபோலாகத்திருத்தி, சைவப்பயிர் செய்தல் எளிதன்று. நம்முன்னோர்கள் உடைபைத்துறந்தும் உண்ணுதொழிந்தும் மிகவும் பாடுபட்டு நமக்கெனத்தேடிச் சேமித்துவைத்த நூல்களாகிய நெற்போர்கள் பல வேற்றரசர்களால் எரிக்கு இரையாக்கப்பட்டன. பல பாதுகாப்பின்றி அசாக்கிரதையாகிய அந்துப் பூச்சிக்கிரையாயின. எஞ்சிநின்றனவெல்லாம் அவைதிக நூல்களாகிய பதர்களோடு கலந்து பழைமைபால் உருமாறிவிட்டன. சேர சோழபாண்டியர்களாகிய நதிகள் வறண்டுதிடராயின. மடங்களாகிய ஏரிகள் பெரும்பாலும் விழலுக்குப்பாய்கின்றன. உழவர்களாகியநமக்குத் தரித்திரம் என்னும் நோய் அதிகரித்திருக்கிறது. நம்முடையபங்காளிச் சைவஉழவர்களோ நமக்கு விரோதிகள். இவர்கள் தாங்களும் உழுது பயிர்செய்யமாட்டார்கள். நம்மையும் பயிர்செய்யவிடார்கள். நம்முடைய மாமன் மைத்துனன்மாரெல்லாம் அண்ணாத்தைமாராயிருக்கிறார்கள். மற்றுமுள்ள நம்முடைய உறவினரோ, சிலர் பரமலோபிகளாய், பணப்பெட்டியின்மேல் ஓரேபடுக்கையாய்ப் படுத்துக்கொண்டிருக்கிறார்கள். சிலர் முழுக்குருடராய் நம்முடைய நிலைமையை எவ்வளவு எடுத்துக்காட்டினாலும் பார்க்கமாட்டாதவர்களாயிருக்கிறார்கள். சிலர் பிணச்செவிடராய் நாம் எவ்வளவு உரத்துக் கூவினாலும் கேளாமலிருக்கிறார்கள். சிலர் சைவப்பயிர்செய்வதாக நடித்துப் புறப்பட்டு, பிறகு நம்பினவர்க்கு நாமஞ்சாத்துகிறார்கள். சிலர் சுயநலப்பிரியராய் "எது எக்கேடு கெட்டாலும் நமக்



கென்ன" வென்று தங்கள்வரையில் உண்பதும் உடுப்பதுமாய் எட்டி பழுத்தாற்போல் இருக்கிறார்கள். சிலர் தாசிவேசிகளையும், கள்ளு சாராயங்களையும், அர்பத்னட்போன்ற பாங்கிகளையும் நம்பி எவ்வளவானாலும் கொடுப்பார்கள். நம்மை நம்பி ஒருகாசும் கொடார்.

நம்முடைய உறவினர் இவ்விதமாயிருத்தலால் நம்முடைய பண்ணையாட்கள் கூட்டங்கூட்டமாகவும் கிராமங் கிராமமாகவும், அயலாருக்கு அடிமையாகிறார்கள். (கல்வி) அறிவற்றகுண்டைகளோவெனில், அவற்றைச் சரியாய் ஓட்டுவாரின்றி வழியென்றும் வாய்க்காலென்றும் பாராமல் கண்டவிடமெங்கும் ஓடுகின்றன. பழைய எழுத்தாணிக் கலப்பைகள் மிகவும் துருப்பிடித்துக் கூர்மழுங்கிப் பயனிலவாயின. இவ்வளவு சீர்கேடும் ஆபத்துமான நிலைமையில் நாம் சைவப்பயிர்செய்யமுயல்வது பகீரதப் பிரயத்தனமாகும். ஆயினும், நாம் சும்மாவிருக்கமுடியாது. ஆதலால், அங்கும் இங்கும் காதத்திற்கொருவராகச் சிதறுண்டு இலை மறை காய்போல் மறைந்திருக்கும் உண்மைச் சைவாபிமான சீலர்களாகிய நமது சகோதரச் சைவ உழவர்களே, வெளிப்பட்டுவாருங்கள். யாவரும் விரைந்து சென்னைச் சிவனடியார் திருக்கூட்டமாகிய செந்நெற்களத்தில் வந்து கூடுங்கள். கூடிச்சுகிக்கும் வழியை நாடுங்கள். நம்முன்னோர்கள் சேமித்து வைத்த நூல்களாகிய நெற்போர்கள் பெரும்பாலும் அழிந்துபோனாலும், எஞ்சிநின்றவற்றுள் அவைதிக நூல்களாகிய பதர்களோடுகலந்து உருமாறியிருந்தனவற்றை, நமது சந்தான குரவர்களும் சமயகுரவர்களுமாகிய தெய்விக உழவர்கள் திருவருளாகிய காற்றில் தூற்றி, அப்பதர்களை யகற்றிச் சுத்தப்படுத்தி வேதாகம சாரமாய்விளங்குஞ் சைவசித்தாந்த உண்மைகளாகிய நெல்மணிகளைச் சித்தாந்த சாத்திரங்களும் தேவாரத்திருமுறைகளுமாகிய நெற்கூடுகளிலிட்டு, திருச்சிற்றம்பல முத்திரையிட்டுவைத்திருக்கிறார்கள். இவைகள் "எரியினிடைவேவாது; ஆற்றெதிரேயோடும்; என்புக்கும் உயிர்கொடுக்கும்; இடுநஞ்சாற்றும்; கரியைவளைவிக்கும்; கல்மிதக்கப்பண்ணும்; கராமதலைகரையிலுறக்காற்றும்; முள்ளிச்செடிக்கும் முத்திகொடுக்கும்." இந்நெற்கூடுகள் நம்மிடத்திலிருக்கின்றன. இவற்றுள் சிவஞானபோதமென்னும் விதைநெற்கூடு, குபேரனைத் தோழனாகக்கொண்டு, பொன்மலையைக்கரத்திலேந்தி, வெள்ளிமலையில் வீற்றிருந்து, கனகசபையில் நடனமிடும் நமது முதலாளி (தட்சிணாமூர்த்தி) கையிலேயே இருக்கிறது. அவர் இலேசானவரன்று; வித்தின்றியே விளைவு செய்பவர். ஆனாலும், அவர் தமது தாசர்க்கும்,

நேசர்க்கும், புத்திரர்க்கும், தம்முடன் வேற்றுமையின்றி உறவாடும் உறவோர்க்குமே எதையும் இல்லையென்னுது கொடுப்பவர். மற்றவர்களின் கண்ணுக்குமாத்திரமன்றி மனதுக்கும் அகப்படாமல் எங்கும் ஒளித்திருக்கும் நெஞ்சங் கறுத்தகள்ளர். ஆயினும், அவர் தோத்திரப் பிரியராதலால், அவரைக் கண்ணீருங் கம்பலையுமாகத் தோத்திரஞ்செய்தால் எங்கிருந்தேனும் உடனே வெளிப்பட்டு அருள் செய்வர். அவர் மனைவியாரோ, இன்னுங்கன்னியாகவேயிருந்தாலும், இடைவிடாமல் அளவற்றகுழந்தைகளைப் பெற்றுச் சலியாது வளர்ப்பவள் இருநாழிநெல்லைக்கொண்டு முப்பத்திரண்டறங்களையும் வளர்த்த அறப்பெருஞ்செல்வி. நமது முதலாளி இந்த அம்மாள் ஆட்டுகிறபடியே ஆடுகிறவர். அவருக்கு மனமிரங்காவிட்டாலும் இந்த அம்மாளைக்கொண்டு அவரை மனமிரங்கப்பண்ணலாம். அன்றியும், அவர் மூத்தபிள்ளை மெத்த நல்லவர். இவர் நமக்குக் கொடாவிட்டாலும் அவர் இருக்குமிடத்தைக் காட்டிவிடுவர். இதற்கு நமது நாரையூர் நம்பியண்ணுவேசாட்சி. இவர்களெல்லோரும் நமக்குத்தெரியாமல் ஒளித்திருந்தாலும், இளையபிள்ளை (ஆளுடையபிள்ளையார்) இவர்களைத் தனது ஒருசிறு விரலாற் சுட்டி அங்க அடையாளங்களுடன் காட்டிவிடும். சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளாகிய மேகம் எங்கும் பிரசங்கமழை பொழிகின்றது. போஷகர்களாகிய துறவுகளும் ஏழைபடியார்களாகிய கிணறுகளும் இருக்கின்றன. ஆதலால், நமது சகோதரச் சைவ உழவர்களே, நாம் அஞ்சுவதியாதொன்றுமில்லை, அஞ்சவருவதுமில்லை. நம்மிடத்திலிருந்த பழைய எழுத்தாணிக் கலப்பைகளால் இப்போது பயனில்லாவிட்டாலும், புதுமாதிரியான பேனக் கலப்பைகளும் அச்சுக்கலப்பைகளும் நமக்கு எங்குங்கிடைக்கும். இவைகளைக்கொண்டு நாம் எதற்குஞ் சலியாமற்பாடுபட்டு, சைவப்பயிர்செய்து, நினைக்குந்தோறும் காணுந்தோறும் கேட்குந்தோறும் எப்போதும் என்புருகப் பரமானந்தத் தேன் சொரியும் சிவபோகாமுதமுண்டு சுகித்து இறுமாந்து வாழலாம். வாருங்கள்! வாருங்கள்!! இன்புற்றிட நாம் எடுத்ததேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருங்கள்!!!

---

## பதி பசு பாசம்.

(8-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

சிவபெருமானுரின் வடிவம் அருவெனவாவது உருவெனவாவது அருவுரு வெனவாவது சொல்லப்படாதது. ஆயினும், அவர் ஆன்மாக்களின்மீது வைத்தகாருணியத்தால் அருவெனவும் உருவெனவும் அருவுருவெனவும் சொல்லப்படும் மூவகை வடிவங்களையுங் கொண்டுளார். இவை வடமொழியில் நிஷ்களம் சகளம் சகளநிஷ்களம் என்னப்படும். இம் மூன்று வடிவங்களும் அவருக்கு எக்காலத்திலும் உண்டு. இவற்றுள் அருவம் என்பது அருள் ஞானம் என்பவைபோல் உருவமில்லாத வடிவம். உருவென்பது நிலம் நீர் என்பவற்றைப்போற் காணப்படுவது. அருவுருவம் என்பது அருவத்தன்மையையும் உருவத்தன்மையையும் ஏககாலத்திற் பொருந்தியிருப்பது. உருவப்பொருள்கள் அக்கினியிலிடப்பட்டால் அவைமுற்றிலும் அருவமாக மாறுதற்குமுன் பெறும் நிலைமை அருவுருவ நிலைக்கு ஒருவாறு ஒப்பிடலாம். சிவபெருமான் இம் மூவகை வடிவங்களையுங் கொள்ளாவிட்டால் சிருட்டி முதலிய தொழில்கள் நடைபெறு. பிரபஞ்சம் காரியப்படாமல் அளவுபடாத ஆன்மாக்களெல்லாம் அறிவுஞ் செயலுமற்று ஆணவமலத்திலழுந்தி துயர்கூர்ந்திருக்கும். ஆதலினுல், பரங்கருணைத்தடங்கடலாகிய நம்மிறைவர், அளவு படாத ஆன்மாக்களின் அளவுபடாத பக்குவங்களுக்கிணங்க, அளவு படாத கருணை வடிவங்களைக் கொண்டிருக்கிறுர். ஆன்மாக்கள் பாசவசப்பட்டு மாயாமயமாகிய சரீரமெடுப்பதுபோல், சிவபெருமான் தம்மிச்சையால் அருளுருவங்களைக் கொள்ளுகிறுர். அவர் கொள்ளும் வடிவங்கள் எண்ணிறந்தன வாயினும், அவற்றை ஒன்பது வகையாகச் சித்தாந்த ஞான நூல்கள் கூறும். அவை சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் என்பனவாம். இவற்றுள் சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் இந்நான்கும் நிர்க்குண சிவத்தின் அருவத்திருமேனிகளெனவும், சதாசிவன் அருவுருவத் திருமேனியெனவும், மகேசுரன், உருத்திரன், மால் அயன் இந்நான்கும் உருவத்திருமேனிகளெனவுஞ் சொல்லப்படும். இவற்றுள் அருவுருவத் திருமேனியாகிய சதாசிவ வடிவமே சிவலிங்கவடிவமாம்.

சிவபரம் பொருளின் பேரருள், பேரறிவு, பேராற்றல், பேரின்பம் முதலிய இறைமைக் குணங்களுக்குச் சத்தியென்று பெயர். நீரினின்று குளிர்ச்சியும் நெருப்பினின்று வெப்பமும் பிரிக்கப்படாதது போல், சிவத்தினின்றும் சத்தியும் சத்தியினின்றும் சிவமும் வேறுகாமல் இரண்டும் ஒரேபொருளாய், தாதான்மியமாயிருக்கும். சிவபரம்பொருள் சத்தியொடு கூடியிருத்தலினுல் எத்தொழிலையும் செய்யவல்லதாயிருக்கிறது. இல்லாவிடில் சிவம் எத்தொழிலையுஞ்

செய்யாது. "சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரினெத் தொழிலும்வல்லதாம், இவள் பிரிந்திடினியங்குதற்குமரிதரி தெனு மறை யிரைக்குமால்" என்றனர் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளும்.

சிவபரம் பொருள் தன்னுடைய இறைமைக் குணங்களாகிய பேரருளையும் பேராற்றலையும் பேரறிவையும் பிரபஞ்சம் காரியப்படுவது கருதி வெளிப்படுத்திய தன்மையைச் சிவத்தினின்றுஞ் சத்தி தோன்றியதாக ஞானநூல்கள் கூறுநிற்கும். சிவம் சத்தியுடன் கூடிப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தலால், சிவம் உயிர்களுக்கெல்லாம் தந்தையாகவும், சத்தி தாயாகவும் துணியப்படும். சிவம் ஆண் எனவாவது பெண் எனவாவது சொல்லப்படாத பொருளாயிருந்தும் ஆன்மாக்களின்மீது வைத்த காருணியத்தால் சிவமும் சத்தியும் ஆணும் பெண்ணுமாகிய திருமேனிகளைத்தாங்கி, படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும். இதனால் இவர்களாற் படைக்கப்படும் உலகுயிர்களும் இவர்களைப்போலவே குணகுணிகளாகவும் ஆணும் பெண்ணுமாகவுமிருக்கின்றன. என்று சிவம் உண்டோ, அன்றே சத்தியும்உண்டு. சத்தியின்றிச்சிவமில்லை. சிவமின்றிச் சத்தியில்லை. அதுபோல் உலகில் என்று ஆண் உண்டோ அன்றே பெண்ணும் உண்டு. ஆணின்றிப் பெண்ணில்லை. பெண்ணின்றி யாணில்லை.

**திருவிளையாடற் புராணம் - திருமணப்படலம்.**

*பண்ணுமின் னிசையு நீருந் தண்மையும் பாலும் பாலி*
*னண்ணுமின் சுவையும் பூவு நாற்றமு மணியு மங்கேழ்*
*வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருந்தா லொத்த*
*தண்ணலு முலக மீன்ற வம்மையு மிருந்த தம்மா.*

சத்தி ஒன்றே உயிர்களின் பலவாறான பக்குவங்களுக்கிணங்கப் பலவாறான பேதங்களையுடையதாயிருக்கும். அச்சத்தியைத் தன் குணமாகக்கொண்ட சிவமும் அச்சத்தியையே தன் வடிவமாகவுங் கொண்டு பலவகையான பேதங்களைப் பெற்றுவிளங்கும். பளிங்கானது தன்னையடுத்த பொன்னிறம் நீலநிறம் முதலியவற்றைத் தான் பெற்றுத்தோன்றினும் தன் இயற்கை நிலைமை மாறாதிருப்பது போல், சத்தியின் பேதமெல்லாம் சிவபேதமாக விளங்கினும், சிவம் தன்னிலைமை மாறாமல் நிர்விகாரியாயிருக்கும். சத்தியின் பேதங்கள் எண்ணிறந்தனவாயினும், அவை சிவபரம் பொருளின் சந்நிதியில் நடைபெறும் (சிருட்டி) படைத்தல், (திதி) அளித்தல், (சங்காரம்) அழித்தல், (திரோபவம்) மறைத்தல், (அநுக்கிரகம்) அருளல் என்னும் ஐந்தொழில்களை நோக்கி பராசத்தி, ஆதிசத்தி, இச்சா



சத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி என்னும் ஐவகைச் சத்திகளாகத் தொகுத்துரைக்கப்படும். இவற்றுள் பராசத்தியே ஆதிசத்தி அல்லது திரோதசத்தியாகியும், இச்சாஞானக் கிரியாசத்திகளாயும், சிவபெருமானுக்குத் திருமேனியாயும், சுத்தமாயையும் அசுத்தமாயையுமாகிய விந்து மோகினி மான் என்னும் உபாதானங்களைக்கூடி நின்று காரியப்படுத்தி, சிவபெருமான் செய்யும் பஞ்சகிருத்தியங்களுக்கும் காரணமாகியுமிருக்கும். திரோத சத்தியானது ஆன்மாக்களைப் போகத்தில் அமிழ்த்தி கன்மநாசஞ்செய்து ஆணவமலத்தைப் பரிபாகப்படுத்தும். இச்சாசத்தியென்பது சர்வான்மாக்களையும் மோட்சத்திற் சேர்க்கவேண்டு மென்னும் பேரருளாகும். ஞானசத்தியென்பது ஆன்மாக்கள் செய்த இருவினைகளின்படி அவைகள் வினைப் பயன்களைப் புசித்துத் தொலைக்கச்செய்யும் பேரறிவாகும். கிரியா சத்தியாவது ஆன்மாக்களின் பொருட்டுப் படைத்தல் முதலிய தொழில்களைச்செய்யும் பேராற்றலாகும். சிவபெருமான் இச்சா ஞானக்கிரியா சொரூபனுயிருத்தலினல் அவருக்கு இலயசிவன் என்றும் போகசிவன்என்றும் அதிகார சிவன் என்றும் திருநாமங்கள் உண்டாயின.

**சிவப்பிரகாசம்.**

*பரந்தபரா பரையாதி பரன திச்சை*
*பரஞானங் கிரியைபர போக ரூபந்*
*தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்*
*தனுகரண புவனபோ கங்க டாங்க*
*விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்*
*விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்*
*தரந்தைகெட மணிமன்று ளாடல் காணு*
*மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.*

**சிவஞான சித்தியார்.**

*உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவி றந்த*
*வருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது*
*திருமேனி யுபயம் பெற்றேஞ் செப்பிய மூன்று நந்தங்*
*கருமேனி கழிக்க வந்த கருணையின் விளைவு காணே.*

*சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன் றிகழுமீச*
*னுவந்தரு ளுருத்திரன்றான் மாலய னென்றிறென்றாய்ப்*
*பவந்தரு மருவநாலிங் குருவநா லுபயமொன்றாய்*
*நவந்தரு பேதமேக நாதனே நடிப்பனன்றே.*

## கடவுளுக்கும் ஒரு மனைவி உண்டா ?

சிலர், கடவுளைத் தாயும் தந்தையுமாக வழிபடுவாரைப் பார்த்து, "கடவுளுக்கும் ஒரு மனைவி உண்டா" என்று கேட்டுப் பரிகாசஞ் செய்கிறார்கள். இவர்கள் மேலே கூறிய சிவசத்திகளின் இலக்கணங்களை உணர்வார்களாயின், இவர்களுக்குச் சிவபெருமானும் அவரருட்சத்தியுங்கூடி உயிர்களுக்குத் தந்தையுந் தாயுமா யெழுந்தருளி உபகரித்துவரும் அருட்டிறம் விளங்கும். உலகத்தின் இருப்பையும் இலக்கணங்களையுங்கொண்டு கடவுளின் இருப்பையும் இலக்கணங்களையும் அறியவேண்டும். இதனை "ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங் கோலமே" என்ற திருவாசகத்தா லுணர்க. உலகம் சித்து, அசித்து என்னும் இருவகைப்படும் பிரபஞ்சமாகும். சித்துப்பொருள்கள் என்பன அறிவுடைப்பொருள்களாகிய ஆன்மாக்கள். அசித்துப்பொருள்கள் என்பன அறிவில் பொருள்களாகிய தனுகரணபுவனபோகங்கள். இவற்றுள், சித்துப்பொருள்களாகிய ஆன்மாக்கள் இயற்கையில் பூதங்களல்ல, இந்திரியங்களல்ல, கரணங்களல்ல, ஆணல்ல, பெண்ணுமல்ல. அறிவே ஆன்ம சொரூபமாகும். இவ்வாறிருந்தும், ஆன்மாக்கள் புல்லாகவும் பூடாகவும் மரமாகவும் பறவைகளாகவும் விலங்குகளாகவும் மனிதராகவும் ஆணாகவும் பெண்ணாகவும் இருக்கக்காண்கிறோம். இவ்வாறே, கடவுளும் ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாத ஞானசொரூபராயினும், அவர் பல திருநாமங்களையும் பல திருமேனிகளையும் பெற்று ஆணாகவும் பெண்ணாகவுமிருக்கிறார் என்று உணர்தல்வேண்டும். ஆனால், ஆன்மாக்கள் பாசவசப்பட்டு, சுதந்திரமிழந்து, அறிவும் ஆற்றலும் மழுங்கி, மாயையைக்கொண்டு கடவுளால் தமக்குக்கொடுக்கப்படும் சரீரங்களைப்பெற்று ஆணும் பெண்ணுமாகப்பிறந்து உழல்கின்றன. கடவுளோ, ஆன்மாக்களைப்போலன்றி, மலரகிதராய் சுதந்திரமும் பேரறிவும் உடையவராய், ஆன்மாக்களுக்கு அருள்செய்யவேண்டி, தன் இச்சையின்படி, ஆன்மாக்களின் பக்குவங்களுக்கிணங்க, அவைகளைப்போலவே ஆணும் பெண்ணுமாகவும் அவைகளுக்கெல்லாம் தாயுந்தந்தையுமாகவும் இருந்து அருள்செய்கிறார். இதனை "குவளைக் கண்ணி கூறன் காண்க, அவளுந் தானு முடனே காண்க" எனத் திருவாசகமும் "தாயுந்தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனார்" என்று தேவாரமும் முழக்கும். ஆன்மாக்களுக்கென வசிக்க ஓர் இடமில்லாதிருந்தும் அவைகளுக்கு வினைப்பயனை ஊட்ட வேண்டி நம்மிறைவர் அவைகளின் வினைக்கீடாகப் பலவகைப்பட்ட



புவனங்களாகிய இடங்களைக்கொடுப்பதுபோல், நம்மிறைவரும் ஆன்மாக்கள் உச்சீவிப்பதுகருதி, காருணியத்தால் சிவலோகம் ஸ்ரீகைலாயம் முதலிய இடங்களையும், குருலிங்க சங்கமங்களாகிய தானங்களையும் தம்மிருப்பிடமாகக் கொண்டிருக்கிறார். சிலர் "தாயுந் தந்தையுமாயிருப்பவர் கடவுள் ஒருவரேயாயிருக்க, அவரைத் தந்தையாக மாத்திரமேனும் தாயாக மாத்திரமேனும் வழிபட்டாற் போதாதோ" என்பார்கள். தாயின்றித்தந்தையும் தந்தையின்றித்தாயும் இல்லையாகையாலும், கடவுள் தாயுந்தந்தையுமா யெழுந்தருளி உயிர்களுக்கு அருள்செய்வது சுருதி யுத்தி யனுபவங்களாற் பெறப்படுதலாலும் அவரைத் தாயுந்தந்தையுமாக வழிபடுவதே சிறந்தவழிபாடாகும்.

**திருவாசகம்.**

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.

(இன்னும்வரும்.)

---

## கற்பு.

பெண்கள் கணவன் கற்பித்தவண்ணம் நடத்தல் கற்பு என்னப்படும். இதனை ஔவையார் "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என விளங்கவுரைத்தனர்.

திலதவதியார், காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார், இயற்பகை நாயனர், சிறுத்தொண்ட நாயனர், இளையான் குடிமாற நாயனர், அப்பூதியடிகளுயனர் முதலிய நாயன்மார்களின் பத்தினிமார்கள், அருந்ததி, வண்டோதரி, அகலிகை, திரௌபதி, மேனை, சுநீதி, சாவித்திரி, அநுசூயை, சந்திரமதி, தமயந்தி, நளாயினி, வாசுகி முதலிய பதிவிரதாசிகாமணிகளின் சரித்திரங்களை வாசிப்பவர்களுக்குக் கற்பிலக்கணங்கள் எளிதாய் விளங்கும்.

மனிதர்கள் தங்கள் மனம் வாக்குக் காயங்களுக் கெட்டாத கடவுளை வழிபட்டுய்வதற்கு நூல்களில் பற்பல மார்க்கங்கள் கூறப்பட்டன. அம்மார்க்கங்களெல்லாம் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இந்நான்கினுள் அடங்கும். இவற்றுள் சரியை கிரியைகள் (உருவமில்லாத) நிஷ்களப் பொருளாகிய கடவுளை (உருவமாக) சகளமாக வழிபடுதலாம். இச்சகளவழிபாடு குருலிங்க சங்கம வழிபாடு

என்னப்படும். இவற்றுள் குருவழிபாடு ஆசாரியனை மனிதனாக மதியாமல் சிவமாக மதித்து வழிபடுதலாம். லிங்கவழிபாடு சிவலிங்க முதலிய சொரூபங்களைக் கல் முதலியனவாக எண்ணாமல் சிவமாக எண்ணி வழிபடுதலாம். சங்கமவழிபாடு சிவவேடந் தரித்தவர்களைச் சிவமாகக்கருதி வழிபடுதலாம்.

சிவபெருமான் தம்மை ஞானத்தால் இரண்டறக்கூடி யனுபவிக்கமாட்டாத மனிதர்களுக்குக் குருலிங்க சங்கமங்களாயிருந்து, அவர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்று அனுக்கிரகம் செய்வர் என்பது வேதாகமங்களின் துணிபும் உலகானுபவமுமாம். அவ்வாறே, ஞானத்தாற் கடவுளையடையப் பெறாத பெண்கள், தங்கள் கணவனை மனிதனாக எண்ணாமல் தெய்வமாக எண்ணிச் செய்யும் பூசையைக் கடவுள் ஏற்று அவர்களுக்கு அருள் செய்வர் என்பது வைதிக நூல்களின் துணிபும் உலகானுபவமுமாம். இவ்வுண்மையை யறியாமலே பலர், இந்துக்கள் பெண்களை அடிமைகளைப்போல் நடத்துகிறார்கள் என்றும், இவர்கள் ஆடவர்களின் சுயநலம் பாராட்டி, பெண்கள் புருஷனைத் தெய்வமாக வழிபடச் செய்வது மதியீனம் என்றும், புருஷரைப்போலவே பெண்களும் சுயாதீனம் பெற்று வெளிவந்துலவி விவகரியாமையால் தேசாபிவிருத்தி குன்றிவிடுகிற தென்றும் எண்ணுகிறார்கள். மனிதர்கள் ஆசாரியனையும் விக்கிரகங்களையும் சிவனடியார்களையும் தெய்வமாகவழிபடுதல், ஆசாரியர் முதலியவர்களின் பிரயோஜனங் கருதியன்று. வழிபடுவாருடைய பிரயோஜனத்தைக் கருதியேயாம். அதுபோல் பெண்கள் கணவனைத் தெய்வமாக வழிபடுவது கணவன் நலத்தைக் கருதியன்று. தாங்கள் நற்கதியடையக் கருதிச் செய்யும் கடவுள் வழிபாடாகும்.

ஆசாரியனும் சீடனும் மனிதரேயாயினும், தீக்கையென்னுங் கிரியையால் ஒருவன் ஆசாரியனாய் மற்றொருவனால் வழிபடற் குரியனாகிறான். விக்கிரகங்கள் சிலைகளேயாயினும் பிரதிட்டை யென்னுங் கிரியையால் கடவுளாக வழிபடற் பாலனவாகின்றன. அடியார்கள் மனிதர்களேயாயினும் வேடம் அன்பு ஒழுக்கம் முதலிய வற்றால் கடவுளாகவே வழிபடற்குரியராகின்றனர். அவ்வாறே, கணவனும் மனிதனேயாயினும் விவாகச் சடங்குகளாகிய கிரியையால் அவன் மனைவியால் தெய்வமாக வழிபடற்குரிய னாகின்றான். மெய்யன்பர்களின் அன்பின் விசேடத்தால் மரக்கால் கட்டுத்தறி முதலியவைகளும் சிவலிங்கமாயின. கள்ளவேடம் பூண்டவர்களும் மெய்யடியாரானார்கள். அவ்வாறே, பதிவிரதைகளின் கற்பின் மேம்பாட்டி-



னால் அவர்கள் கணவரும் தெய்வத்தன்மைபெற்று அவர்களால் வழிபடற்குரியராவர்.

மனிதர்கள் எல்லோருமே குருலிங்க சங்கமவழிபாடு செய்தாலும், அறுபத்து மூன்று நாயன்மார் முதலியவர்களைப்போல் சிறந்த பத்திசெய்வோர் மிகச்சிலரே. அதுபோல், கணவனிடத்தில் மேலே கூறிய பதிவிரதா சிரோமணிகளைப்போல் சிறந்த பத்தி செய்வோரும் மிகச் சிலரேயாவர்.

பெண்கள் புருஷனிடத்திற் செய்யும் அன்பு, தலையன்பு எனவும், இடையன்பு எனவும், கடையன்பு எனவும் மூவகைப்படும். தலையன்பாவது இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் எதிர்பாராமல் வெறும் அன்பு காரணமாகச் செய்யும் அன்பாகும். (இம்மைப் பயன் என்பது இப்பிறவியில் அனுபவிக்கும் இன்பமும், மறுமைப் பயனென்பது மறுபிறப்பில் அனுபவிக்கும் இன்பமுமாம்.) இடையன்பாவது மறுமைப் பயனைக் கருதிச் செய்யும் அன்பாகும். கடையன்பாவது கணவனால் இப்பிறவியிலடையும் சுகத்தைக் கருதிச் செய்யும் அன்பாகும்.

தலையன்புடையவர்களுக்குக் கணவன் இறந்தான் என்று கேட்ட மாத்திரத்திலேயே உயிர் நீங்கிவிடும். இடையன்புடையவர்கள் கணவன் இறந்தால் தாங்களும் கணவனுடன் உடன் கட்டையேறுதல் முதலியவற்றால் தங்கள் உயிரை மாய்ப்பர். (இவ்வாறு செய்தல் இக்காலத்தில் இராஜநீதிக்கு விரோதமாகும்.) கடையன்புடையவர்கள் கணவன் இறந்தால் தங்களுக்கு அழகு அனாவசியமென்று மொட்டையடித்துக் கொள்வார்கள். ஆபரணமணியார்; வெற்றிலைப்பாக்கு உண்ணார்; வெள்ளைப் புடைவையன்றி வேறு ஆடைகளைத் தரிக்கார் ; ஒரேபொழுது உண்பார்கள்; பாயில் படுக்காமல் தரையிற்படுப்பார்கள் ; உபவாசங்களால் ஐம்புலன்களை யடக்குவார்கள்; செபம் தியானம் பூசை திருக்கோயிலிலே திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், பூக்கள் கொய்துதிருமாலை தொடுத்தல் முதலிய பணிகளைச் செய்வார்கள்.

பெண்கள், விவாகத்துக்குமுன் தந்தையினாலும், விவாகத்திற்குப் பிறகு கணவனாலும், கணவனுக்குப்பின் புத்திரர்களாலும் காக்கப்படவேண்டும் எனவும், அவர்களுக்கு எக்காலத்திலும் சுதந்திரமில்லையெனவும் நீதிநூல்கள் கூறுகின்றன. பெண்களுக்குப் புறக்காவலினும் அவர்கள் மனக்காவலேசிறந்ததாம். இதனை "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்—நிறைகாக்குங் காப்பே தலை" என்னுந்

திருக்குறளாலறிக. பெண்களுக்கு மனக்காவலிருந்தாலும் அவர்களுக்குப் புறக்காவலும் அவசியமாதலால் அவர்கள் எக்காலத்திலும் தனித்திருக்கலாகாதென நீதிநூல்கள் கூறும். ஸ்ரீராமர் கானகத்தில் மானைப்பிடிக்கச் சென்றபோது இலக்குமணரைச் சீதாதேவிக்குக் காவலாகவைத்துச் சென்றனர். இலக்குமணரும் சீதாதேவியை விட்டு நீங்கினமையால் அத்தேவியாரை இராவணன் கொண்டுபோக நேர்ந்தது. இதனால் பெண்களுக்குப் புறக்காவலும் அவசியமாமென்பது விளங்கும். இதுபற்றியே ஔவையார் "காவ ருனே பாவையர்க்கழகு" என்று பொதுப்படக் கூறினர்.

"அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும் - வன்னவுடல்
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்"

என்னும் இச்செய்யுளின்படி, கற்புடையமனைவி தன்கணவனைத் தன்குழந்தையைப்போல் நேசித்துப் பாதுகாக்கிறாள். அவன் அறிவாலும், செல்வத்தாலும், உருவத்தாலும் வேறு மற்றெதனாலும் மிகவும் இழிந்தவனாயிருப்பினும் அவனை யாவரினும் உயர்வாகமதித்து அவனுக்கு அடிமைத்தொழில் செய்கிறாள். பெருந்தூக்கம் பேருண்டி முதலிய மூதேவி குணங்களின்றி, உண்டிசுருங்குதல், கணவனுக்குப் பின்னுண்ணல், பின்னுறங்கி முன்னெழுதல், மஞ்சளையும் மங்கலநாணையும் பிரியாமை, சுத்தமாயிருத்தல், இன்சொற்கூறல், முகமலர்ந்திருத்தல், ஈகை, கருணை, விருந்தோம்பல், பெரியோரைப்பேணல்முதலிய நற்குணங்களால் இலக்குமியையொத்து இல்லறத்தை யழகுபெறச் செய்கிறாள். தன்கணவன் தன்னை எவ்வளவு கோபித்துத் தண்டித்தாலும் முகமலர்ந்து பொறுமையை வகிக்கிறாள். தனக்கென இன்பம் வேண்டாமலும் கணவனுடன் மாறுபடாமலும் காமநூலின்படி கலந்து அவனுக்குக் கலவியின்பத்தைக் கொடுக்கிறாள். கணவனுக்குச் சமயோசிதமான யுத்திகள்கூறி அவனுக்குத் தீங்குவாராவண்ணம் காத்து இல்லறத்தை நடத்துவிக்கிறாள். அன்றியும், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களையும் தனக்கு அணிகலமாகக்கொண்டு, தன்கணவனன்றி வேறொருவன் தன்னைக்காண நாணுகிறாள். தான் அறிவினால் எவ்வளவு சிறந்திருப்பினும் அதனால் கர்வமடையாமல், ஆசாரியன்முன் சீடன் அடங்கி நிற்றல்போல், கணவன்முன் அறியாதவள்போல் அடங்கி நிற்கிறாள். தன்கணவனன்றி வேறொருவன் சமீபத்தில் வரின் அச்சமும் அருவருப்பும் அடைகிறாள்.



இவ்விதமான நல்லொழுக்கங்களையுடைய கற்புடை மகளிரோடு கூடி வாழப்பெற்றால் இல்லறமே நல்லறமாகும். இவ்வித மங்கையர் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படுவர். இவர்கள் "பெய்யெனப் பெய்யுமழை." இத்தகைய கற்பிலக்கணங்கள் பரதகண்டத்தில் மாத்திரம் இருப்பதனாலும், பரதகண்டம் புண்ணியபூமி யெனப்படும்.

கற்புடைமகளிர் கணவனைத்தெய்வமாக வழிபடுவதும், அவனைத் தாய்போல்நேசிப்பதும் அவன் மீதுவைத்த அன்பு காரணத்தாலன்றி பிறிதொரு காரணத்தாலன்று. ஆதலால், கணவன், தன்மனைவி தன்னைத் தெய்வமாக வழிபடுவதனால் தான் தன்னை அவளுக்குத்தெய்வமாக எண்ணிச் செருக்கலாகாது. அவள் அவனுக்கு அடிமையைப்போல் ஊழியஞ்செய்தலால், அவன் அவளைத் தன்னடிமையைப்போல் எண்ணிநடத்தலாகாது. அவன் அவளை யெவ்வளவு வருத்தினாலும் அவள் அடங்கியும் அவனைவிட்டு நீங்காமலும் இருப்பதனால் அவளைத் தன்மனம் போனபடி நடத்தி மனம் நோவப் பண்ணலாகாது. அவள் அவனுக் குண்டாகுங் குறைவுகளைத் தனக்கு வந்தனவாக எண்ணி வருந்துதலால், அவன் அவளுக்கு நேருங்குறைகளைத் தனக்கு நேர்ந்தனவாக எண்ணி நடத்தல் வேண்டும். அவள் அவனைத் தாய்போல் நேசிப்பதனால், அவன் அவளைத்தந்தைபோல் நேசிக்கவேண்டும். இவ்வாறு கணவனும் மனைவியும் பாலும் நீரும் போல் கலந்து ஒருவரையொருவர் நேசித்து வாழும் வாழ்க்கையே வாழ்க்கையாம். இவ்வாறு வாழ்வதனாலுண்டாகும் உலக இன்பமே உலக இன்பமாம். இவ்வித வாழ்க்கையால் இம்மையில் மாத்திரமன்றி மறுமையிலும் இன்பமுண்டாகும். இவ்வாறு இருவரும் ஒருவரையொருவர் நேசித்து வாழ்வதைவிட்டு, தன்னலம் மாத்திரம் கருதி, கணவனுக்கு இடையூறு செய்யும் மாதர்களும், மனைவிக்கு இடையூறு செய்யும் ஆடவர்களும் இம்மைப்பயனோடு மறுமைப்பயனையும் இழந்து நரகில் வீழ்ந்து வருந்துவர்.

---

# ஞானவிசாரணை

12-வது பக்கத் தொடர்ச்சி.

### திருமந்திரம்.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ண லதுகண் டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே.

புண்ணியம், பசு புண்ணியம் எனவும் பதி புண்ணியம் எனவும் இருவகைப்படும். பதி புண்ணியமாவது சரியை கிரியை முதலியன வாம். பசு புண்ணியமாவது உயிர்களுக் கிரங்கி அன்னமிடுதல், மருந்து கொடுத்தல், சத்திரம் வைத்தல், குளம் வெட்டுதல் முதலிய தருமங்களாம். பசு புண்ணியத்தால் சொர்க்காதி போகங்கள் கிடைக் கும். பதி புண்ணியத்தால் சாலோக சாமீப முதலிய பதவிகள் கிடைக்கும். ஆதலால், பதி புண்ணியமாகிய சரியை கிரியைகளை யநுட்டித்தால் சாலோக சாமீப பதவிகளையடைந்து, அப்பதவிகளி லிருந்தே சாரூப்பிய பதவியையும், கடைசியாக சாயுச்சியமாகிய முத்தியையும் அடையலாம். சரியை கிரியைகளைக் கிரமமாக அனுட் டியாமல் ஞானமடைய விரும்பி வெறும் ஞான நூலாராய்ச்சியிலேயே காலங்கழிப்போர், பாடுபட்டுப் பணத்தைச் சம்பாதித்துச் சிவனஞ் செய்யாமல் பேராசைகொண்டு இரசவாதஞ் செய்யவிரும்பித் தம் கையிலிருந்த திரவியத்தையுமிழந்து வருந்துவார்போல், யாதொரு பயனையுமடையாமல் மேலுமேலும் பிறப்பிறப்புகளிற் பட்டுழல்வர்.

கடவுள் ஆன்மாக்களுக்கு ஞானத்தை வருவித்து, தமது திரு வடி நீழலாகிய சிவானந்தப்பேற்றைத் தருதலையே தமது தொழிலா கக்கொண்டிருக்கிறார். இத்தொழிலே அவரது பஞ்சகிருத்திய மாம். எவ்வாறெனில்,—

பாராதி பூதநீயல்லை - உன்னிப்
பாரிந்திரியங் கரண நீயல்லை
யாராயுணர்வு நீயென்றான் - ஐய
னன்பாயுரைத்தசொல் லானந்தந்தோழி
சங்கர சங்கர சம்பு - சிவ

* * *

எனத் தாயுமானசுவாமிகள் திருவாய்மலர்ந் தருளியவாறு, ஆன்மாக்களின் உருவம் அறிவு என்னப்படும். ஆனால், ஆன்மாக் கள் அநாதியாகவே ஆணவமலத்தால் மறைப்புண்டு தம் அறிவும் செயலும் குன்றி வருந்தா நிற்கும். இதனையுணர்ந்த பெருங்கருணை யும் பேராற்றலும் பேரறிவும் உடைய கடவுள் அவற்றை ஆணவ மலத்தினின்றும் விடுவித்துத் தமது திருவடியின்பத்தைக் கொடுத் தருளவேண்டி அவற்றின் அறிவைச் சிறிது சிறிதாக விளக்கத் தொடங்கி, ஆரம்பத்தில் புல் பூடு மரம் முதலாகிய பிறவிகளைக் கொடுத்து பரிசம் என்னும் ஒரு அறிவு விளங்கச்செய்கிறார். பரிச வுணர்ச்சி நிரம்பியதும் இப்பி சங்கு முதலிய பிறவிகளையெடுக்கச் செய்து பரிச உணர்ச்சியோடு இரதத்தையும் அறியச்செய்கிறார். இவ்விரறிவும் நிரம்பியபின் கறையான் எறும்பு முதலிய பிறவிகளைக் கொடுத்து பரிசம் இரதம் இவற்றோடு கந்தத்தையும் அறியச்செய்கி றார். கந்தவுணர்ச்சி நிரம்புதலும், தும்பி வண்டு முதலிய பிறவிக ளைக்கொடுத்து உருவத்தையும் அறியச்செய்கிறார். அதன்பின் பற வைகளாகவும் விலங்குகளாகவும் பிறக்கச்செய்து பரிசம், இரதம், கந்தம், உருவம் ஆகிய இந்நான்கினோடு சத்தத்தையும் அறிவிக்கிறார். இவ்வைவகை யறிவும் நிரம்பியபின் மனிதப்பிறவியைக் கொடுத்து இவ்வைந்தினோடு சித்தத்தாலறியும் அறிவை விளக்கி நல்வினை தீவி னைகளைப் பகுத்தறியச் செய்கிறார்.

### திருவாசகம்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்.

மானிட சரீரமெடுத்த பின்னும் தீவினை செய்பவர்களை மீண்டு மீண்டும் கீழான பிறவிகளெடுக்கச் செய்தும் நரகங்களிற் செலுத்தி யும் அவை செய்த தீவினைகளை அனுபவிக்கச் செய்து பரிசுத்தப்படு த்தி மறுபடியும் மானிடப் பிறவி கொடுக்கிறார். மானிடப் பிறவியில் நல்வினை செய்தவர்களுக்குத் தன்னிடம் அன்புண்டாகும்படிச்செய்து பலசன்மங்களில் சரியை கிரியை யோகம் என்னும் இம்மார்க்கங்களில் விட்டு அறிவை மேலும் மேலும் விளக்கிச் சிவஞானம் வருவித்து ஆணவமலத்தைப் பரிபாகப்படுத்தி, தமது திருவடியின்பமாகிய சா யுச்சிய முத்தியைத் தந்தருளுகின்றார்.

இவ்வாறு ஆன்மாக்களுக்குச் சரீரங்களைக் கொடுத்தல் சிருட்டி யெனவும், சரீரத்துடன் கூடி இன்ப துன்பங்களை யனுபவிக்கச் செய்

தல் திதியெனவும், இறப்பைக் கொடுத்து இளைப்பாறச் செய்தல் சங்காரம் எனவும், ஆன்மாக்களுக்கு வினைப்போகங்களை மறைத்து நின்றூட்டுதல் திரோபவம் எனவும், ஞானத்தை விளக்கித் திருவடியின்பத்தைக் கொடுத்தல் அனுக்கிரகம் எனவும், இவ்வைந்து தொழிலுமே சிவபிரானுரது பஞ்சகிருத்தியங்களெனவும் சொல்லப்படும்.

ஆதலால், மனிதர்களுக்கு ஞானத்தை வருவித்தலே சிவபரம்பொருளின் தொழிலாயிருத்தலினுல் மனிதர்கள் செய்யவேண்டுவனவெல்லாம் அவர் செய்யும் கைம்மாறில்லாத பேருபகாரத்தை மறவாமல் அவரை அகங்குழைந்து மெய்யரும்பி வணங்கி அவர் பணியில் நிற்றலும், அவருக்கு விருப்பமான நல்வினைகளைச் செய்தலும், அவர் வெறுக்கும் தீவினைகளைச் செய்யா தொழிதலுமேயாம்.

**தேவாரம்.**

நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

சிலர் தாங்கள் முற்போந்த ஜனனங்களில் சரியை கிரியை யோகம் என்னும் மார்க்கங்களில் இருந்து அவை சித்திக்கப் பெற்றதனுல் இச்சன்மத்தில் ஞான நூல்களையாராயும் புண்ணியம் வந்து விட்டதெனவும், இப்புண்ணிய வசத்தால் ஆலயவழிபாடாதிகள் தங்களுக்கு அனுவசியமாகக் காணப்படுகின்றன வெனவும் நினைத்துக் கொள்ளுகிறுர்கள். ஐயோ, பாவம்! இது மிகவும் விபரீத உணர்ச்சியேயாம். ஞானிகளின் இருதயத்தில் சிவசூரியன் இடைவிடாது பிரகாசித்துக் கொண்டிருத்தலினுல் அவர்கள் அகமுகமாயிருக்குங் காலமெல்லாம் இரவு பகல் தோன்றுமல் இருக்கும். அதனுல் அவர்களுக்குப் புறப்பூசைகள் அனுவசியம். நித்திரைசெய்வோன் கையிலிருந்த பொருள் அவனுக்குத் தெரியாமலே அவன் கையினின்றும் நழுவிப்போவதுபோல் ஞானிகளுக்குப் புறப்பூசையுடன் உலக விவகாரங்களும் தாமே நீங்கி விடும். ஞானிகளும் பகிர்முகப்படும்போது ஆலயவழிபாடு முதலிய புறப்பூசைகளை இடைவிடாது செய்வர். இது நமது சமயாசாரியர் முதலான மகா ஞானிகளின் சரித்திரங்களால் இனிது விளங்கும்.

**பட்டணத்துச் சுவாமிகள்.**

காணீர் கதியொன்றுங் கல்லீ ரெழுத்தஞ்சும் வல்லவண்ணம்
பேணீர் திருப்பணி பேசீ ரவன்புக ழாசைப்பட்டுப்



பூணீ ருருத்திர சாதன நீறெங்கும் பூசுகிலீர்
வீணீ ரெளிதோ மருதப் பிரான்கழன் மேவுதற்கே.

**திருவாசகம்.**

ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

ஞானிகளுக்கு ஞானம் யோகம் கிரியை சரியை என்னும் நால்வகை வழிபாடுகளுமுரியன. யோகிகளுக்கு யோகம் கிரியை சரியை என்னும் மூன்றுவித வழிபாடுகள் உரியன. கிரியாவான்களுக்குக் கிரியையும் சரியையும் உரியன. சரியாவான்களுக்குச் சரியையே உரியது. ஆதலினுல் உண்மை ஞானிகள் எக்காலத்தும் சரியை கிரியைகளைக் கைவிடார்.

**சிவஞான சித்தியார்.**

ஞானயோ கக்கிரியை சரியை நாலு
நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரிய
னூனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்
யோகிகிரி யாவான்ற ஞெண்கிரியை யாதி
யானவிரண் டினுக்குரியன் சரியையினி னின்றோ
னச்சரியைக் கேயுரிய னுதலினு லியார்க்கு
மீனமிலா ஞானகுருவே குருவு மிவனே
யீசனிவன் றனென்று மிறைஞ்சி யேத்தே.

ஆதலால், சகோதரர்களே, நமது சமயகுரவர் சந்தான குரவர் முதலியபெரியோர்கள் அநுட்டித்த வழிகளைக் கைப்பற்றுங்கள். கற்பனை கடந்த நம்பெருமான் நாம் உய்யும்வண்ணம் கருணையே உருவமாகி, சகளீகரித் தெழுந்தருளியிருக்குந் திருக்கோயில்களையடைந்து திருவலகிடுங்கள், திருமெழுக்குச் சாத்துங்கள்; திருநந்தனவனம் வைத்துப் பத்திரபுஷ்பமெடுத்துத் திருமாலைகட்டுங்கள்; சுகந்ததூபமிடுங்கள்; திருவிளக்கேற்றுங்கள்; தேவாரமுதலிய மறைகளை மனங்கசிந்துருக, கண்ணீர்வார, உரோமஞ் சிலிர்ப்ப, பண்ணோடு பாடி, தோத்திரஞ்செய்யுங்கள்; கைகளைக்கொட்டித் தோத்திரங்களைப்பாடி ஆனந்தக் கூத்தாடுங்கள்; விதிப்படி சிவலிங்கார்ச்சனை செய்யுங்கள். சிவலிங்கமுதலிய திருமேனிகளையும், சிவனடியார்களையும் சிவனுகவே வழிபடுங்கள்.

(இன்னும் வரும்.)

# சைவசித்தாந்த மகாசமாஜம்.

இச்சமாஜம் தோன்றி ஒன்பது வருடங்கள் கழிந்தன. சைவ சமய பரிபாலனத்திற்கென யாவருக்கும் பொதுவானதொரு மகா சபையில்லாமையை யெண்ணி நெடுங்காலமாக வருந்திநின்ற சைவாபிமானிகள் பலர் இச்சமாஜம் தோன்றியபோது இதனால் சைவஉலகத்திற்குப் பல நன்மைகள் உண்டாகுமென எதிர்பார்த்துச் சந்தோஷித்தார்கள். பலர் இதின் அங்கத்தினரானார்கள். பலர் இச்சமாஜத்தைத் தங்கள் ஊர்களுக்கு வருவித்துப் பெருஞ்செலவிட்டுக் கூட்டங்கள் கூட்டுவித்துப் பல உதவிகளைச் செய்வாராயினர். சைவசமயவொழுக்கங்கள் மிகவுங் குன்றிக் கிடக்கும் இக்காலத்திலும் பலர் முன்வந்து இச்சமாஜத்தை ஆதரிப்பது மிகவும் கொண்டாடத்தக்கதாம். பொது ஜனங்கள் செய்யும் உதவிகளுக்கேற்றவாறு இச்சமாஜத்தின் காரியதரிசி முதலிய முக்கிய காரியஸ்தர்கள் தங்கள்கடமைகளைச் செய்துவருவரேல் இச்சமாஜத்திற்குப் பலரும் மேலுமேலும் உதவி செய்யப் பின்னிடார்கள். ஆனால், சென்ற 1914ஆ சமாஜ ரிபோர்ட்டை வாசித்தால் இவர்கள் சென்ற வருடத்தில் தங்கள் கடமைகளைத் திருப்தியாய்ச் செய்யவில்லையென்று புலப்படுகிறது.

இந்த ரிப்போர்ட்டு பார்வைக்கு 10-பாரங்கொண்ட பெரிய புத்தகமாக இருப்பினும், நிர்வாக சபையார் எந்தக் காரியத்தையும் சரியாய்ச் செய்யவில்லையென்பதை விளக்குகின்றது. இதை யச்சிட்டதற்கு ஏறக்குறைய 120 ரூபா செலவாயிருக்கலாம். இதைச் சுருக்கி இரண்டொரு பாரத்தில் அச்சிட்டிருந்தால் பெருந்தொகை மீதியாயிருக்கும். இதின் முற்பகுதியாகிய இரண்டு பாரங்களில் நிர்வாக சபையார் ஏதேதோ செய்ததாகக் காட்டப்பட்டது. பிற்பாகமாகிய எட்டு பாரங்களில் ஏறக்குறைய 1600 அங்கத்தினரின் பெயர்களும் விலாசங்களும் காட்டப்பட்டன. இவர்களுள் 514 பேர் சந்தா கொடாமல் சமாஜத்தார் வி. பி. தபாலில் அனுப்பிய பத்திரிகைகளைத் திருப்பிவிட்டவர்கள். இவர்களுள்பலர் சாதாரண தபாலில் அனுப்பிய பத்திரிகைகளைத் தம்மிடம் வைத்துக்கொண்டு வி. பி. தபாலில் அனுப்பிய பத்திரிகைகளை வாங்காமல் திருப்பிவிட்டார்கள். இதனால் சமாஜத்தார் மாதமாதம் வெளியிட்ட 1500 பிரதிகளுள் ஏறக்குறைய 500 பிரதிகள் பயனிலவாய்ப் பாழாயின. இவ்வாறு இவர்களால் சமாஜத்திற்கு நேரிட்ட நஷ்டமே பெரிதாயிருக்க, போதாக்குறைக்கு, குதிரை செத்ததுடன் குழிதோண்டவும் பணஞ் செலவிட்டது போல், இத்தனைபேர்களின் விலாசமுதலியவற்றையும் ரிப்போர்ட்டில் வெளியிட்டமை அனுவசியமும் வீண்பணச் செலவும் பிரயாசையுமாகும். இவர்கள் இதனை அச்சிட்ட வரையிலாவதுபிழையின்றி அச்சிட்டதாகக் காணப்படவில்லை. ஸ்ரீமான் - S. இரத்தினவேல் செட்டியாரவர்கள் சமாஜத்தின் உப அக்கிராசனராயிருந்ததோடு, பெருஞ்செலவிட்டு சமாஜத்தைச் சென்னை டவுன் ஹாலில்



கூட்டியுபகரித்த வள்ளற்றன்மையைப் பலரும் அறிவார்கள். இவர் பெயரை "சமாஜத்தால் வெளியிடும் பத்திரிகையாகிய சித்தாந்தத்தினை சந்தாவைக்கொடுத்துப் பெறுது கைவிட்டவர்கள்" பெயர்களுள் முதற்பெயராகக் காட்டியிருக்கிறார்கள். ஒரு சந்தாவுங் கொடாதவர் பெயர் ஆயுள் சாமாசிகர் பெயர்களினிடையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. திவான்பஹதூர் ஆனரபில் மிஸ்டர் ஜஸ்டிஸ் T. சதாசிவ ஐயரவர்கள் ஆயுள் சாமாசிகரென முன் இரண்டு ரிபோர்ட்டுகளில் வெளியாயிருக்க இவர்பெயர் இதில்சேர்க்கப்படவில்லை. இதில் இவ்விதமான பிழைகள் இன்னும் எவ்வளவிருக்குமோ!

இனி ரிப்போர்ட்டின் முற்பகுதியைச் சிறிது ஆராய்வோம். இப்பகுதியில் "அங்கத்தினர்" என்னும்தலைப்பின் கீழ் "இம்மகாசமாஜத்தில் நவம்பர்மீ கடைசிவரையில் சேர்ந்துள்ள அங்கத்தினர் தொகை 1360 ஆகும். ஆனால் சமாஜத்தால் வெளியிடும்பத்திரிகையாகிய "சித்தாந்தத்தினை" சந்தாவைக்கொடுத்துப் பெறுது கைவிட்டவர்கள்தொகை 514 ஆகும். கடந்தவருடத்தில் தம் சந்தாவை செலுத்தி அங்கத்தவராய் நின்றதொகை 818 ஆகும். இவ்வருடம் 542 பெயர்கள் சமாஜத்துச்சேர்ந்துள்ளது மிகுதியும் நற்குறியே யாகும்" என்று வெளியிடப்பட்டுள்ளது. இதனை இன்னுந் தெளிவாய் விளக்கினால்,

கடந்த வருடமுடிவில் இருந்தவர்கள் 818; இவ்வருடம் சேர்ந்தவர்கள் 542; மொத்தம் 1360; இவ்வருடம் நீங்கினவர்கள் 514; இவ்வருட முடிவில் நின்றவர்கள் 846.

என்று விளக்கப்பட்டு சென்ற வருடத்தைக் காட்டிலும் இவ்வருடத்தில் அதிகமாகச் சேர்ந்துள்ளவர்கள் (846—818) 28 பேர்களே என்று தெரியவரும்.

அன்றியும், 1913ஆ ரிப்போர்ட்டின்படி அவ்வருடத்தில் சேர்ந்தவர்கள் 592 பேர். நீங்கினவர்கள் 330 பேர். 1914ஆ ரிப்போர்ட்டின்படி இவ்வருடத்திற் சேர்ந்தவர்கள் 542பேர். நீங்கினவர்கள் 514 பேர். இதனால் இதற்குமுன் வருடத்தைக்காட்டிலும் இவ்வருடத்தில் சேர்ந்தவர்கள் கொஞ்சமெனவும் நீங்கினவர்கள் அதிகமெனவும் விளங்கும். 1913 வருடத்தில் நீங்கினவர்கள் 330 பேரேயாயிருக்க, 1914 வருடத்தில் நீங்கினவர்கள் தொகை 514 என அதிகரித்துவிட்டதை தீக்குறி என்று வருந்தாமல் "மிகுதியும் நற்குறியேயாகும்" என்று மிகுதிச் சொல்லோடு உம்மையையும் ஏகாரத்தையுங் கூட்டிச் சந்தோஷித்துக் கூறற்கிடமில்லை.

"சித்தாந்தம்" என்னுந்தலைப்பின்கீழ் "இம்மகா சமாஜத்தால் நடத்தும் வேலைகளில் மிகச்சிறந்தது "சித்தாந்தம் என்னும் பத்திரிகையைப் பன்னிரண்டு மாதங்களுக்கும் வெளிப்படுத்தி அங்கத்தவர்க்கு அனுப்பமுயற்சிப்பதே யாகும்" என்று வெளியிடப்பட்டுள்ளது. இதற்குமுன் வருடத்து ரிப்போர்ட்டிலும் "இம்மகாசமாஜத்தார் செய்துவரும் வேலைகளில் மிகமுக்கியமானது சித்தாந்தம் என்

னும் பத்திரிகையைப் பன்னிரண்டுமாதங்களிலும் வெளிப்படுத்தி அங்கத்தவர்களுக்கு அனுப்ப முயற்சிசெய்ததே யாகும்" என்று வெளியிடப்பட்டது. இதனால் கடந்த இரண்டு வருடங்களிலும் நிர்வாகசபையார் மாதம்மாதம் தவறாமல் பத்திரிகையை வெளியிடவில்லையென்பதும் சமாஜத்திற்கு இவ்வருடத்தில் நேர்ந்த நஷ்டங்களுக்கு இதுவொருமுக்கிய காரணமாமென்பதும் விளங்கும்.

அன்றியும், சித்தாந்தப் பத்திரிகை முதலில் நான்கு பாரங் கொண்ட சஞ்சிகைகளாக வெளிவந்தது. கடந்த வருடத்தில் அது மூன்று பாரங்களாகக் குறைந்தது. இதில் வெளியிடப்பட்ட விஷயங்களும் இதைவாங்குவோர் பெரும் பாலார்க்கு எளிதில் விளங்கிப் பயன்படக் கூடியனவாகக் காணப்படவில்லை. இதில் அச்சுப்பிழைகளும் எழுத்துப் பிழைகளும் அதிகமாகக் காணப்படுகின்றன.

"பிரசங்கங்கள்" என்னுந்தலைப்பின் கீழ் "இவ்வருடத்தில் சமாஜ சம்பந்தமாக நடத்திய பிரசங்கங்கள் இவ்வறிக்கையின் இறுதியில் காட்டப்பட்டுள்ளன" என்று வெளியிடப்பட்டது. இதிற்குறித்த பிரசங்கங்களின் தொகை சரியாய் ஐம்பது. இவற்றுள் 35 பிரசங்கங்கள் திருவாவடுதுறை யாதீனக் கட்டளையின் படி, அவ்வாதீனத்திலிருந்து ஊதியம் பெற்றுவரும் தூத்துக்குடிவாசியாகிய ஸ்ரீ. பொ. முத்தையாபிள்ளை யவர்களாற் செய்யப்பட்டன. எஞ்சிய 15 பிரசங்கங்களும் சமாஜத்தின் நிர்வாகசபையினரால் நடத்தப்பெறாமல் பெரும்பாலும் இச்சமாஜத்தின் அத்தியட்சர்களைக் கொண்டு அயலவர்களால் செய்விக்கப்பட்டன. இவ்வாறு அயலவர் செய்வித்த பிரசங்கங்களை இச்சமாஜ சம்பந்தமாக நடத்திய பிரசங்கங்களென ரிப்போர்ட்டில் காட்டப்பட்டிருக்க இச்சமாஜத்தின் தலைவராகிய ஸ்ரீமத் சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் கடந்த வருடத்தில் நெடுங்காலம் நெடுந்தூரம் யாத்திரைகள் செய்து அவ்வத்தலங்கள் தோறும் செய்த மிக அரியபெரிய இனிய பிரசங்கங்களுள் ஒன்றும் இந்தப்பெரிய ரிப்போர்ட்டிலாவது மாதாந்தப் பத்திரிகைகளிலாவது குறிக்கப்படாமைக்குக் காரணம் விளங்கவில்லை.

"நிர் வாகசபையின் கூட்டம்" என்னுந் தலைப்பின் கீழ் "இவ்வருடம் நிர்வாகசபையினர் சமாஜ உத்தியோக சாலையில் 7 முறை கூடி சமாஜசம்பந்தமான விஷயங்களைப் பேசிச் செய்யவேண்டியவற்றைச் செய்தனர்" என்று வெளியிடப்பட்டது. சமாஜ ஒழுங்குகளின்படி இவர்கள் மாதமாதம் கூடாமல் ஒருவருடத்திற்கு ஏழு முறைமாத்திரம் கூடினதற்குக் காரணம் விளங்கவில்லை. சமாஜத்தின் பொக்கிஷதாரர் 1914ஸ்ரீ ஜனவரிமீ 3-ம் தேதியன்று "இவ்வருடத்தில் சமாஜசம்பந்தமாகச் செய்யவேண்டியன பல இருத்தலினால் அவற்றைப்பற்றி யாலோசிக்குமாறு உடனே நிர்வாகசபை கூட்டும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று காரியதரிசியாருக்குக் கடிதம் எழுதிக் கேட்டுக்கொண்டனர். இக்கடிதத்திற்குப் பதில் கிடைக்காமையால் மறுபடியும் 1914ஸ்ரீ பிப்ரவரிமீ 18உ



காரியதரிசியாருக்குஎழுதிய கடிதத்தில் "சென்ற ஜனவரிமீ 3-உ தங்களுக்குக் கடிதம் எழுதி உடனே நிர்வாகசபை கூட்டும்படியாகக் கேட்டேன். தாங்கள் நாளதுவரையில் கூட்டாமைக்குக் காரணம் தெரியவில்லை" என்று எழுதினர். இக்கடிதத்திற்குப் பதிலாக காரியதரிசியார், பொக்கிஷதாரரைப்பார்த்து அடாதவார்த்தை கூறினர் இதனை பொக்கிஷதாரர் உடனே சில அத்தியக்ஷர்களுக்குக் கடிதவாயிலாக அறிவித்ததுடன் "அடுத்த டைரெக்டர் மீட்டிங் வைக்கும்வரையில் நான் இனி செக்குகளில் கையெழுத் திடவாவது தொகைகொடுக்கவாவது சம்மதியேன்" என்று காரியதரிசியாருக்கு எழுதிதெரிவித்தனர். இதனால் பொக்கிஷதாரர் தாம் வகித்த உத்தியோகம் நீங்கலாக, சமாஜசம்பந்தமான மற்ற விஷயங்களைக் கவனிக்கவாய்க்காமல் கடந்த நவம்பர்மீ 3உ வரையில் தமது உத்தியோகத்தை நடத்தி இராஜினாமா கொடுத்துவிட்டனர்.

"கணிதபரிசோதகர்" என்னுந் தலைப்பின்கீழ் "மாதந்தோறும் சமாஜக்கணக்கினை வெகு ஊக்கத்துடன் பரிசோதித்துவந்த ஸ்ரீமான் A. சோமசுந்தரம்பிள்ளையவர்களுக்கும் வருடக்கணக்கைப் பரிசோதித்துவந்த ஸ்ரீமான் கிருஷ்ணசாமி முதலியாரவர்களுக்கும் நிர்வாக சபையினர் நன்றிபாராட்டுகின்றனர்" என்று வெளியிடப்பட்டுள்ளது. சமாஜக்கணக்கு மாதந்தோறும் பரிசோதிக்கப்படவேயில்லை. இவ்விஷயமாகக் காரியதரிசியாருக்குப் பொக்கிஷதாரர் 1914ஸ்ரீ அக்டோபர்மீ 11உ எழுதியகடிதம்:—"ஐயா, நமது சமாஜ மாதாந்தரக் கணிதபரிசோதகர் சமாஜக்கணக்கை மாதந்தோறும் கிரமமாய்ப் பரிசோதிப்பதாகக் காணப்படவில்லை. சென்ற ஒன்பதுமாதங்களில் மாதமாதம் பரிசோதிக்காமல் ஒருமுறை கணக்குப் புத்தகத்தைப் பத்துநாள் வரையிலும், மற்றொருமுறை 22 நாள் வரையிலும் தன்னிடம் வைத்திருந்தார். இவர் இதுவரையில் எம்மட்டில் பரிசோதித்தன ரென்பதும் இவர் கண்ட குறைவுபாடுகளும் எனக்கு நாளதுவரையில் தெரிவிக்கப்படவில்லை. இக்கணக்கில் ஏதேனும் ஆட்சேபனைகளிருந்தால் அவற்றை உடனுக்குடனே எனக்குத் தெரிவிக்காமல் நெடுங்காலஞ் சென்று தெரிவித்து இடர்ப்படுத்துவதில் பிரயோஜனமிராதென்பதைத் தாங்கள் அறியவிரும்புகிறேன்"

அன்றியும் காரியதரிசியார் சித்தாந்தப்பத்திரிகைகளின் வரவு செலவு கணக்கு வைக்கவே இல்லை. அல்லாமலும், சந்தாதாரர்கள் பேரேட்டுப் புத்தகமும் முன்வருடத்தில் கணிதபரிசோதகராற் குறிப்பிக்கப்பட்டு மகாஜன சபையாரால் அங்கீகரிக்கப் பட்டவாறு வைக்கப்படாதிருந்ததுடன், நெடுங்காலம் சரியான கணக்கு வைக்காமல் பிறகு முன்வருடத்திலிருந்த புத்தகத்திலேயே கணக்கு எழுதிவரப்பட்டது. இவை கூடலூரில் கூடிய மகாஜனக் கூட்டத்தில் ருசுப்படுத்தப்பட்டன. இவ்வாறு ஒழுங்காகக் கணக்கு வைக்காமையால் அக்கூட்டத்திற்கு வந்திருந்தவர்களுள் சிலர், தாங்கள் கிரமமாகச் சந்தாசெலுத்தியும் கடிதங்களெழுதியும் சித்தாந்தப்பத்

திரிகைகள் கிரமமாக அனுப்பப்படவில்லையென்று முறையிட்டார்கள். இக்குறைவுபாடுகள் கணிதபரிசோதகர் ரிப்போர்ட்டில் காட்டப்படவேயில்லை.

1914ஷு ரிப்போர்ட்டைக்கொண்டு எடுத்துக் காட்டக்கூடிய குறைவுபாடுகள் இன்னும் பலவுள. அவற்றை விரிக்கிற் பெருகும்.

1913ஷு ரிப்போர்ட்டில் "துண்டுபத்திரிகைகள் (Tracts)" என்னுந் தலைப்பின்கீழ் "நாடுகள்தோறும் துண்டுபத்திரிகைகளை அச்சிட்டு அனுப்பிச்சைவசித்தாந்த உணர்ச்சியைப் பலர்க்கும் புகட்ட இச்சமாஜத்தார்க்கு மிகுதியும் ஆவலிருப்பினும் பொருட்குறைவால் 'கடவுளின் சொரூபம்" என்னும் பத்திரிகை ஒன்றே இவ்வருடம் அச்சிட்டுப் பலர்க்கும் உதவ நேர்ந்தது" என்று வெளியிடப்பட்டது. 1911ஷு முடிவில் இருந்த இருப்பு ரூபா 13. அவ்வருடம் ஏழுதுண்டு பத்திரிகைகள் வெளியிடப்பட்டன. 1912ஷு முடிவிலிருந்த இருப்பு ரூபா 86. அவ்வருடத்தில் ஐந்து துண்டு பத்திரிகைகள் வெளியாயின. 1913ஷு முடிவிலிருந்த இருப்பு ரூபா 80. அவ்வருடத்தில் ஒரே துண்டு பத்திரிகை வெளியிடப்பட்டது. கடந்த 1914ஷு முடிவில் இருந்த இருப்பு ரூபா 604. இவ்வருடத்தில் ஒரு துண்டு பத்திரிகையேனுந் தலைகாட்டவில்லை.

1911, 1912-ம் வருடங்களில் பல வீதிப்பிரசங்கங்கள் நடைபெற்றன. 1912ஷு ரிப்போர்ட்டில் வீதிப்பிரசங்கங்களால் உண்டாகும் நன்மைகளைப்பற்றி இரண்டு பக்கங்கள் நிரம்ப மிக நீளமாய் எழுதப்பட்டது. 1913, 1914-ம் வருடங்களில் வீதிப்பிரசங்கம் ஒன்றேனும் நடைபெற்றதாகக் காணப்படவில்லை.

மாதமாதம் சமாஜ ஆபீசுக்குக் குடிக்கூலி ரூபா நாலும், (ரைட்டர்) விகிதருக்கு 15 ரூபா சம்பளமும் (கடைசியில் 12 ரூபா) கொடுக்கப்பட்டன. இவையும் காகிதம், வண்டி, கடிதத்தபால் முதலியவையும் சேர்ந்து ஆபீசு செலவுக்குமாத்திரம் சென்ற வருடம் சுமார் 250 ரூபா செலவாயிருக்கலாம். இவ்வளவு செலவிட்டும் சமாஜக் காரியங்கள் ஒன்றேனும் ஒழுங்காய் நடத்தப்படவில்லை. நிர்வாக சபையார் இன்னும் நீடித்து இவ்வாறே சமாஜக்காரியங்களை நடத்துவார்களாயின் சமாஜம் தலையெடுக்காது. ஆதலால், அவர்கள் இவ்வருட முதலாவது தங்கள் கடமைகளைச் சரியாய்ச் செலுத்தி சமாஜத்தை முன்னுக்குக்கொண்டுவருதல் வேண்டுமென்னுமாசைமீதூர "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண் - மேற்சென்றிடித்தற் பொருட்டு" என்னும் வேதவாக்கைக் கடைப்பிடித்து மேற்கூறிப் குறைவுபாடுகள் எடுத்துக் காட்டப்பட்டன வாகலின் பெரியோர் இதனைக் குற்றமாக எண்ணுமலிருப்பதுடன், இதனால் மனஞ்சோராமல் இச்சமாஜம் அபிவிருத்தி யெய்துவதற்குரிய உதவிகளைச்செய்யப் பின்னிடாதிருப்பதும் கடனும். சுபம்.

சைவசித்தாந்த மகாசமாஜ அங்கத்தவரில் ஒருவனுகிய

சைவாபிமானி.

## விளம்பரம்.

இப்பத்திரிகையைப் பெறுவோர் அன்புகூர்ந்து கவனிக்கவேண்டுவன:—

(1) இப்பத்திரிகைகளைப் பாதுகாத்தால் வருடந்தோறும் ஒரு புத்தகமாகச் சேர்த்துத் தைத்துக்கொள்ளலாம்.

(2) இதைப் பெறுவோர் விரைவில் மொத்தமாக 12 அணு நேரிலாவது மணியார்டர் மூலமாகவாவது செலுத்தவேண்டும். வி. பி. மூலமாய்ப் பெறுவோர் 13 அணு செலுத்தவேண்டும்.

(3) இயன்றவர்கள் இச்சபையின் மெம்பர்களாகச் சேர்ந்துமாதந்தோறும் நாலணுமுதல் தங்களாலியன்ற சந்தா செலுத்திச் சமயபரிபாலனஞ் செய்விக்குமாறு பிரார்த்திக்கப்படுகிறுர்கள்.

(4) ஒவ்வொருவரும் இதைப் பிறர் பலரும் வாங்கிப் படிக்கும்படிச் செய்தல் பெரும் புண்ணியமாம்.

(5) பத்திரிகைகள் வெகு சாக்கிரதையாய் தபாலில் அனுப்பப்படுவதனுல் இவை சேராமைக்குச் சபையார் உத்திரவாதிகளல்லர்.

(6) விலாசம் மாறினுல் உடனே தெரிவித்தல் வேண்டும்.

(7) இப்பத்திரிகை இப்போதுஇரண்டே பாரமாக வெளிவருவதனுல் விஷயங்களை விரிவாக எழுதிவெளியிட இயலவில்லை. சைவாபிமானசீலர்கள் அன்புகூர்ந்து பாரம் ஒன்றுக்கு 7 ரூபா உதவி செய்யின் அவர்கள் பேரால் ஒருபாரம் அதிகமாக அவர்கள் உதவிபுரியும் மாதங்களில் வெளிவரும்.

### பாடியில் வீடுகட்டிக்கோள்ள இடம் கிடைக்கும்.

சென்னைக்கு 5 மைல் தூரத்திலும், வில்லிவாக்கம் ரெயிலிடத்திற்கு ஒருமைல் தூரத்திலுமுள்ள, தேவாரம் பெற்ற, பாடியென வழங்கும் திருவலிதாயத்தில், மாடவீதி முதலிய விடங்களில், மாதம் ஒன்றுக்கு, மனை ஒன்றுக்கு 8 அணு வீதமாக, 99 வருட உபயோகத்திற்கு, காலிமனைகள் குடிக்கூலிக்கு விடப்படும். அவ்விடத்தில் நீர்வளமும் வீடுகட்டிக்கொள்வதற்கு வேண்டிய அநுகூலங்களும்உண்டு. ஷை ஆலய தருமகர்த்தர் (சென்னை வெங்கையர் வீதியில் வசிக்கும் ம-ா-ா-ஸ்ரீ பாடி-தணிகாசல முதலியாரவர்கள்) வீடு கட்டிக்கொள்வதற்குத் தம்மாலியன்ற சரீர உதவிகளைச் செய்ய முன்வந்திருக்கிறுர்.

## உருத்திராக்கமாலை (ஒன்று)

கௌரிசங்கரத்துடன் பொற்கவசத்தோடு விலைக்குக்கிடைக்கும். வேண்டுவோர் சென்னை வைத்தியநாத முதலி வீதி 30-வது வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ, இ. பாலசுப்பிரமணிய முதலியாருக்குத் தெரிவித்துக்கொள்க.

## தேவாலய தர்மஸ்தாபன சோத்துகள்.

தேவாலய தர்மஸ்தாபன சொத்துகளின் நிர்வாகத்தை இந்தியா கவர்ன்மெண்டார் கவனித்தல் வேண்டுமென்று ஜனத்தலைவர்கள் நெடுங்காலமாக முறையிட்டுக்கொண்டிருந்தார்கள். கடைசியாக இந்தியா கவர்ன்மெண்டார் இவற்றின் சில பகுதிகளைக் கவனிப்பதைப்பற்றி இந்தியா மந்திரிக்குச் சில பிரேரணைகள் செய்தனுப்பினார்கள். இவைகளை இந்தியா மந்திரியவர்கள் அங்கீகரித்துவிட்டாரென்றும், இவற்றின் சம்பந்தமாக மசோதா ஒன்று கொண்டுவரப்படும் என்றும் பத்திரிகைகள் கூறுகின்றன.

---

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின்
### 16-வது வருட மகாஜனக்கூட்டம்.

இச்சபையின் 16-வது வருட மகாஜனக்கூட்டம், நிகழும் ஆனந்தஸு மாசிமீ 24உ (7-3-15) ஆதிவாரம் பகல் 3 - மணிக்கு, இதின் சபாமண்டபத்தில் கூடும். அக்காலத்தில் நடைபெறுவன:—

1. இச்சபையின் 1914ஸு சபாக்கிரந்தத்தையும் வரவு செலவு கணக்கையும் அரங்கேற்றல்.
2. அத்தியட்சர் நியமனம்.
3. இச்சபையினர் இனிவரும் வருடத்தில் செய்யவேண்டிய சைவசமய பரிபாலன சம்பந்தமான விஷயங்களைப்பற்றி யோசித்தல்.

இச்சமயத்தில் இச்சபையின் அங்கத்தினர்களாகிய சைவாபிமானசீலர்களியாவரும் அன்புகூர்ந்து வந்து சிறப்பிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்: உத்திரவின்படி
காரியதரிசி,

சென்னை,
1—2—15.

இ. ஆதிமூல முதலியார்.

